
ஸ்ரீஅபிராமசுந்தரி
அபிராமிபட்டர் அருளிச்செய்த
அபிராமி அந்தாதி

அபிராமி பட்டர் அருளிச் செய்த

# அபிராமி அந்தாதி

## காப்பு

தாரமர் கொன்றையும் சண்பக மாலையும் சாத்தும், தில்லை
ஊரர்தம் பாகத்து உமை மைந்தனே! உலகு ஏழும் பெற்ற
சீர் அபிராமி அந்தாதி எப்போதும் என் சிந்தையுள்ளே
காரமர் மேனிக் கணபதியே நிற்கக் கட்டுரையே.

### ஞானமும் வித்தையும் பெற

உதிக்கின்ற செங்கதிர்! உச்சித்திலகம்! உணர்வுடையோர்
மதிக்கின்ற மாணிக்கம்! மாதுளம் போது! மலர்க்கமலை
துதிக்கின்ற மின்கொடி! மென்கடிக் குங்குமத் தோயம்என்ன
விதிக்கின்ற மேனி! அபிராமி என்தன் விழுத்துணையே. 1

### தெய்வத் துணை கிடைக்க

துணையும் தொழும்தெய்வமும் பெற்ற தாயும் சுருதிகளின்
பணையும் கொழுந்தும் பதிகொண்டவேரும் பனிமலர்ப்பூங்
கணையும் கருப்பஞ் சிலையுமென் பாசாங்குசமும் கையில்
அணையுந் திரிபுரசுந்தரி யாவது அறிந்தனமே. 2

### பாவம் போக்க

அறிந்தேன் எவரும் அறியா மறையை; அறிந்து கொண்டு
செறிந்தேன் உனது திருவடிக்கே திருவே! வெருவிப்
பிறிந்தேன் நின் அன்பர் பெருமை எண்ணாத கரும நெஞ்சால்
மறிந்தே விழும் நரகுக்கு உறவாய மனிதரையே. 3

### உயர்ந்த நிலையை அடைய

மனிதரும் தேவரும் மாயா முனிவரும் வந்து; சென்னி
குனிதரும் சேவடிக் கோமளமே! கொன்றை வார்சடைமேல்
பனிதரும் திங்களும் பாம்பும் பகீரதியும் படைத்த
புனிதரும் நீயும் என்புந்தி எந்நாளும் பொருந்துகவே. 4

### மனக்கவலை தீர

பொருந்திய முப்புரை செப்புரை செய்யும் புணர்முலையாள்
வருந்திய வஞ்சி மருங்குல் மனோன்மணி, வார்சடையோன்
அருந்திய நஞ்சு அமுது ஆக்கிய அம்பிகை, அம்புயமேல்
திருந்திய சுந்தரி, அந்தரி பாதம் என் சென்னியதே. 5

### பிறர் மனங்கவர

சென்னியது உன்பொன் திருவடித்தாமரை; சிந்தையுள்ளே
மன்னியது உன்திரு மந்திரம்; சிந்தூர வண்ணப்பெண்ணே!
முன்னிய நின்அடியாருடன் கூடி முறைமுறையே
பன்னியது என்றும் உன்தன் பரமாகம பத்ததியே. 6

### மோட்ச கதியடைய

ததியுறு மத்தில் சுழலும் என்ஆவி தளர்விலதோர்
கதியுறு வண்ணம் கருது கண்டாய்; கமலாலயனும்,
மதியுறு வேணி மகிழ்நனும், மாலும் வணங்கியென்றும்
துதியுறு சேவடியாய்! சிந்துரானன சுந்தரியே. 7

### துறவறம் சிறக்க

சுந்தரி, எந்தை துணைவி, என்பாசத் தொடரையெல்லாம்
வந்தரி, சிந்தூர வண்ணத்தினாள், மகிடன் தலைமேல்
அந்தரி, நீலி, அழியாத கன்னிகை, ஆரணத்தோன்
கந்தரி கைத்தலத்தாள், மலர்த்தாள் என் கருத்தனவே. 8

### குழந்தைகளுக்கு ஞானம் கிடைக்க

கருத்தன, எந்தைதன் கண்ணன, வண்ணக் கனகவெற்பிற்
பெருத்தன, பால் அழும் பிள்ளைக்கு நல்கின, பேர் அருள் கூர்
திருத்தன பாரமும், ஆரமும், செங்கைச் சிலையும் அம்பும்
முருத்தன மூரலும் நீயும் அம்மே! வந்து என்முன் நிற்கவே. 9

### நிலையான இன்பம் கிடைக்க

நின்றும் இருந்தும் கிடந்தும் நடந்தும் நினைப்பது உன்னை;
என்றும் வணங்குவது உன் மலர்த்தாள்; எழுதாமறையின்
ஒன்றும் அரும்பொருளே! அருளே! உமையே! இமயத்து
அன்றும் பிறந்தவளே! அழியாமுத்தி ஆனந்தமே. 10

### மனக்கவலை நீங்கி மகிழ்ச்சி கிடைக்க

ஆனந்தமாய் என்அறிவாய் நிறைந்த அமுதமுமாய்
வானந்தமான வடிவுடையாள் மறைநான்கினுக்கும்
தானந்தமான சரணார விந்தம் தவளநிறக்
கானந்தம் ஆடரங்காம் எம்பிரான் முடிக் கண்ணியதே. 11



### புண்ணியம் கிடைக்க

கண்ணியது உன்புகழ்; கற்பது உன் நாமம்; கசிந்து பத்தி
பண்ணியது உன் இரு பாதாம் புயத்தில்; பகல் இரவா
நண்ணியது உன்னை நயந்தோர் அவையத்து நான்முன் செய்த
புண்ணியம் ஏது? என் அம்மே! புவிஏழையும் பூத்தவளே! 12

### வைராக்கிய நிலையை அடைய

பூத்தவளே! புவனம் பதினான்கையும் பூத்தவண்ணம்
காத்தவளே! பின்கரந்தவளே! கறைக் கண்டனுக்கு
மூத்தவளே! என்றும் மூவா முகுந்தற்கு இளையவளே;
மாத்தவளே! உன்னையன்றி மற்றோர் தெய்வம் வந்திப்பதே. 13

### தலைமைப் பொறுப்பு ஏற்க

வந்திப்பவர் உன்னை வானவர் தானவர் ஆனவர்கள்;
சிந்திப்பவர் நல்திசைமுகர் நாரணர்; சிந்தையுள்ளே
பந்திப்பவர் அழியாப் பரமானந்தர்; பாரில் உன்னைச்
சந்திப்பவர்க்கு எளிதாம் எம்பிராட்டி நின் தண்ணளியே. 14

### பெருஞ் செல்வமும் சொர்க்கமும் கிடைக்க

தண் அளிக்கு என்று முன்னே பலகோடி தவங்கள் செய்வார்
மண் அளிக்கும் செல்வமோ பெறுவார்? மதிவானவர் தம்
விண் அளிக்கும் செல்வமும் அழியா முத்தி வீடுமன்றோ?
பண் அளிக்கும் சொல் பரிமள யாமளைப் பைங்கிளியே! 15

### அனைத்தையும் அறிந்து கொள்ள

கிளியே! கிளைஞர் மனத்தே கிடந்து கிளர்ந்து ஒளிரும்
ஒளியே! ஒளிரும் ஒளிக்கு இடமே! எண்ணில் ஒன்றுமில்லா
வெளியே! வெளிமுதல் பூதங்களாகி விரிந்த அம்மே!
அளியேன்! அறிவளவிற்கு அளவானது அதிசயமே! 16

### பெண்கள் அழகுடன் இருக்க

அதிசயமான வடிவுடையாள்! அரவிந்தம் எல்லாம்
துதிசய ஆனன சுந்தரவல்லி, துணையிரதி
பதிசய மானது அபசயமாக, முன்பார்த்தவர் தம்
மதிசய மாகவன்றோ வாமபாகத்தை வவ்வியதே. 17

### மரணத்தை வெல்ல

வவ்விய பாகத்து இறைவரும் நீயும் மகிழ்ந்திருக்கும்
செவ்வியும் உங்கள் திருமணக் கோலமும் சிந்தையுள்ளே
அவ்வியம் தீர்த்து என்னை ஆண்ட பொற்பாதமும் ஆகிவந்து
வெவ்விய காலன் என்மேல் வருமபோது வெளிநிற்கவே. 18

### பேரின்பம் உண்டாக

வெளிநின்ற நின்திருமேனியைப் பார்த்து என் விழியும் நெஞ்சும்
களிநின்ற வெள்ளம் கரைகண்டதில்லை; கருத்தின் உள்ளே
தெளிநின்ற ஞானம் திகழ்கின்றது. என்ன திருஉளமோ?
ஒளிநின்ற கோணங்கள் ஒன்பதும் மேவி உறைபவளே! 19

### பெண்களுக்கு மங்கலம் நிலைக்க

உறைகின்ற நின்திருக்கோயில், நின்கேள்வா ஒரு பக்கமோ?
அறைகின்ற நான்மறையின் அடியோ? முடியோ? அமுதம்
நிறைகின்ற வெண்திங்களோ? கஞ்சமோ? என்றன் நெஞ்சகமோ?
மறைகின்ற வாரிதியோ? பூரணாசல மங்கலையே! 20

### பெண்கள் நலமுடன் இருக்க

மங்கலை, செங்கலசம் முலையாள், மலையாள், வருணச்
சங்கலை செங்கைச் சகலகலாமயில், தாவுகங்கை
பொங்கலை தங்கும் புரிசடையோன் புடையாள், உடையாள்,
பிங்கலை, நீலி, செய்யாள், வெளியாள், பசும்பெண் கொடியே! 21

### பிறவா வரம் கிடைக்க

கொடியே! இளவஞ்சிக் கொம்பே! எனக்கு வம்பே! பழுத்த
படியே! மறையின் பரிமளமே! பனிமால் இமயப்
பிடியே! பிரமன் முதலாய தேவரைப் பெற்ற அம்மே!
அடியேன் இறந்திங்கு இனிப் பிறவாமல் வந்து ஆண்டுகொள்ளே. 22

### மனச் சஞ்சலம் உண்டாகாதிருக்க

கொள்ளேன் மனத்தில் நின் கோலம் அல்லாது, அன்பர் கூட்டந்தன்னை
விள்ளேன்; பரசமயம் விரும்பேன்; வியன் மூவுலகுக்கு
உள்ளே! அனைத்தினுக்கும் புறம்பே! உள்ளத்தே விளைந்த
கள்ளே! களிக்குங் களியே! அளிய என் கண்மணியே! 23



### தீராத நோய்கள் தீர

மணியே! மணியின் ஒளியே! ஒளிரும் மணி புனைந்த
அணியே! அணியும் அணிக்கு அழகே! அணுகாதவர்க்குப்
பிணியே! பிணிக்கு மருந்தே! அமரர் பெருவிருந்தே!
பணியேன் ஒருவரை நின் பத்மபாதம் பணிந்த பின்னே. 24

### நினைத்த காரியம் நடக்க

பின்னே திரிந்து, உன் அடியாரைப் பேணிப் பிறப்பு அறுக்க
முன்னே தவங்கள் முயன்று கொண்டேன்; முதல் மூவருக்கும்
அன்னே! உலகுக்கு அபிராமி என்னும் அருமருந்தே!
என்னே! இனி உன்னை யான் மறவாமல் நின்று ஏத்துவேனே. 25

### நாவன்மை அடைய

ஏத்தும் அடியவர், ஈரேழ் உலகினையும் படைத்தும்
காத்தும் அழித்தும் திரிபவராம்; கமழ்பூங்கடம்பு
சாத்தும் குழல் அணங்கே! மணம் நாறும் நின்தாள் இணைக்கு என்
நாத்தங்கு புன்மொழி ஏறியவாறு நகை உடைத்தே. 26

### கெட்ட எண்ணங்கள் அழிய

உடைத்தனை, வஞ்சப் பிறவியை; உள்ளம் உருகும் அன்பு
படைத்தனை; பத்மபதயுகம் சூடும் பணி எனக்கே
அடைத்தனை, நெஞ்சத்து அழுக்கை யெல்லாம் நின்அருட் புனலால்
துடைத்தனை, சுந்தரி! நின் அருள் ஏதென்று சொல்லுவதே. 27

### அரச பதவி அடைய

சொல்லும் பொருளும் என நடம் ஆடும் துணைவருடன்
புல்லும் பரிமளப் பூங்கொடியே! நின் புது மலர்த்தாள்
அல்லும் பகலும் தொழும் அவர்க்கே அழியா அரசும்
செல்லும் தவநெறியும் சிவலோகமும் சித்திக்குமே. 28

### அஷ்ட சித்திகளையும் அடைய

சித்தியும் சித்திதரும் தெய்வம் ஆகித் திகழும் பரா
சக்தியும் சக்திதழைக்கும் சிவமும் தவமுயல்வார்
முத்தியும் முத்திக்கு வித்தும் வித்தாகி முளைத்து எழுந்த
புத்தியும் புத்தியின் உள்ளே புரக்கும் புரத்தையன்றே. 29

### அச்சம் அகற்ற ஆபத்து நீங்க

அன்றே தடுத்தென்னை ஆண்டு கொண்டாய், கொண்டதல்ல என்கை
நன்றே உனக்கு? இனிநான் என் செயினும், நடுக்கடலுள்
சென்றே விழினும் கரையேற்றுகை நின் திருவுளமே;
ஒன்றே! பல உருவே! அருவே! என் உமையவளே! 30

### பெண்ணாசை அகல

உமையும் உமைஒரு பாகரும் ஏக உருவில் வந்து இங்கு
எமையும் தமக்கு அன்பு செய்ய வைத்தார்; இனி எண்ணுதற்குச்
சமையங்களும் இல்லை; ஈன்றெடுப்பாள் ஒரு தாயும் இல்லை
அமையும் அமையுறு தோளியர் மேல்வைத்த ஆசையுமே. 31

### மரணம் நேராதிருக்க

ஆசைக்கடலில் அகப்பட்டு அருளற்ற அந்தகன்கைப்
பாசத்தில் அல்லற்பட இருந்தேனை, நின்பாதம் என்னும்
வாசக் கமலம் தலைமேல் வலிய வைத்து ஆண்டு கொண்ட
நேசத்தை என்சொல்லுவேன்; ஈசர் பாகத்து நேர்இழையே! 32

### தாயின் ஆசிபெற

இழைக்கும் வினைவழியே அடும்காலன் எனைநடுங்க
அழைக்கும் பொழுதுவந்து அஞ்சல் என்பாய்; அத்தர் சித்தமெல்லாம்
குழைக்கும் களபக் குவிமுலை யாமளைக் கோமளமே!
உழைக்கும் பொழுது உன்னையே அன்னையே என்பன் ஓடிவந்தே. 33

### நிலபுலன் கிடைக்க, பயிர் வளர, பொன் கிடைக்க

வந்தே சரணம் புகும் அடியாருக்கு வான் உலகம்
தந்தே பரிவொடு தான் போய் இருக்கும்; சதுர்முகமும்
பைந்தேன் அலங்கல் பருமணி ஆகமும் பாகமும் பொற்
செந்தேன் மலரும், அலர்கதிர் ஞாயிறும், திங்களுமே. 34

### தேவர்கள் அடையாத பேறு பெற

திங்கட் பகவின் மணம்நாறும் சீறடி சென்னி வைக்க
எங்கட்கு ஒருதவம் எய்திய வா! எண்ணிறந்த விண்ணோர்
தங்கட்கும் இந்தத் தவம் எய்துமோ? தரங்கக் கடலுள்
வெங்கட் பணியணை மேல் துயில்கூரும் விழுப்பொருளே! 35



### மெய்ஞானம் அடைய

பொருளே! பொருள்முடிக்கும் போகமே! அரும்போகம் செய்யும்
மருளே! மருளில் வரும் தெருளே! என் மனத்து வஞ்சத்து
இருள் ஏதுமின்றி ஒளிவெளியாகி இருக்கும் உன்தன்
அருள் ஏது? அறிகின்றிலேன்! அம்புயாதனத்து அம்பிகையே! 36

### ஆடை அணிகலன் கிடைக்க

கைக்கே அணிவது கன்னலும் பூவும்; கமலம் அன்ன
மெய்க்கே அணிவது வெண்முத்து மாலை; விட அரவின்
பைக்கே அணிவது பன்மணிக் கோவையும் பட்டும்! எட்டுத்
திக்கே அணியும் திருவுடையான் இடஞ்சேர்பவளே! 37

### இந்திர பதவி கிடைக்க

பவளக் கொடியில் பழுத்த செவ்வாயும் பனிமுறுவல்
தவளத் திருநகையும் துணையா, எங்கள் சங்கரனைத்
துவளப் பொருது துடியிடை சாய்க்கும் துணைமுலையாள்
அவளைப் பணிமின் கண்டீர்! அமராவதி ஆளுகைக்கே. 38

### அகால மரணம் நேராதிருக்க

ஆளுகைக்கு உன்தன் அடித் தாமரைகள் உண்டு; அந்தகன்பால்
மீளுகைக்கு உன்தன் விழியின் கடை உண்டு; மேல் இவற்றின்
மூளுகைக்கு என்குறை: நின்குறையே அன்று; முப்புரங்கள்
மாளுகைக்கு அம்புதொடுத்த வில்லான் பங்கில் வாள்நுதலே! 39

### முற்பிறவியின் பயன் கிடைக்க

வாள்நுதற் கண்ணியை விண்ணவர் யாவரும் வந்து இறைஞ்சிப்
பேணுதற்கு எண்ணிய எம்பெருமாட்டியைப் பேதை நெஞ்சில்
காணுதற்கு அண்ணியன் அல்லாத கன்னியைக் காணும் அன்பு
பூணுதற்கு எண்ணிய எண்ணமன்றோ முன்செய் புண்ணியமே. 40

### அடியார்கள் உறவு பெற

புண்ணியம் செய்தனமே மனமே! புதுப் பூங்குவளைக்
கண்ணியும் செய்ய கணவரும் கூடி, நம் காரணத்தால்
நண்ணி, இங்கே வந்து தம் அடியார்கள் நடுவிருக்கப்
பண்ணி, நம் சென்னியின்மேல் பத்ம பாதம் பதித்திடவே. 41

### அன்னையின் அருள் கிடைக்க

இடம்கொண்டு விம்மி இணைகொண்டு இறுகி, இளகி, முத்து
வடம்கொண்ட கொங்கை மலை கொண்டு, இறைவர் வலிய நெஞ்சை
நடம் கொண்ட கொள்கை நலம் கொண்ட நாயகி, நல் அரவின்
படம் கொண்ட அல்குற் பனிமொழி, வேதப் பரிபுரையே! 42

### பகை நீங்க

பரிபுரச் சீறடிப் பாசாங்குசை, பஞ்சபாணி, இன் சொல்
திரிபுர சுந்தரி, சிந்தூர மேனியள், தீமை நெஞ்சில்
புரிபுர வஞ்சரை அஞ்சக் குனி பொருப்புச் சிலைக்கை
எரிபுரை மேனி இறைவர் செம்பாகத்து இருந்தவளே! 43

### குடும்பம் சிறக்க

தவளே இவள், எங்கள் சங்கரனார் மனைமங்கலமாம்,
அவளே, அவர் தமக்கு அன்னையும் ஆயினள், ஆகையினால்
இவளே கடவுளர் யாவர்க்கும் மேலை இறைவியும் ஆம்
துவளேன் இனி ஒருதெய்வம் உண்டாக மெய்த்தொண்டு செய்தே. 44

### பாவம் நீங்க

தொண்டு செய்யாது, நின்பாதம் தொழாது, துணிந்திச்சையே
பண்டு செய்தார் உளரோ? இலரோ? அப்பரிசு அடியேன்
கண்டு செய்தால், அது கைதவமோ? அன்றிச் செய்தவமோ?
மிண்டு செய்தாலும் பொறுக்கை நன்றே, பின் வெறுக்கை யன்றே! 45

### தோஷம் நீங்க

வெறுக்கும் தகைமைகள் செய்யினும், தம் அடியாரை மிக்கோர்
பொறுக்கும் தகைமை புதியதன்றே? புது நஞ்சை உண்டு
கறுக்கும் திருமிடற்றான் இடப்பாகம் கலந்த பொன்னே!
மறுக்கும் தகைமைகள் செய்யினும் யானுன்னை வாழ்த்துவனே. 46

### பரம்பொருளைக் காண

வாழும் படிஒன்று கண்டு கொண்டேன்; மனத்தேயொருவர்
வீழும் படியன்று, விள்ளும் படியன்று, வேலை நிலம்
ஏழும் பருவரை எட்டும் எட்டாமல் இரவுபகல்
சூழும் சுடர்க்கு நடுவே கிடந்து சுடர்கின்றதே. 47



### சரீரப் பற்று நீங்க

சுடரும் கலைமதி துன்றுஞ் சடைமுடிக் குன்றில் ஒன்றிப்
படரும் பரிமளப் பச்சைக் கொடியைப் பதித்து நெஞ்சில்
இடருந் தவிர்த்திமைப் போதிருப்பார், பின்னும் எய்துவரோ?
குடரும் கொழுவும் குருதியுந் தோயும் குரம்பையிலே. 48

### மரணபயம் நீங்க

குரம்பை அடுத்துக் குடிபுக்க ஆவிவெங் கூற்றுக்கிட்ட
வரம்பை அடுத்து மறுகும் அப்போது வளைக்கை அமைத்து
அரம்பை அடுத்த அரிவையர் சூழவந்து அஞ்சல் என்பாய்
நரம்பை அடுத்த இசைவடிவாய் நின்ற நாயகியே! 49

### தேர்வுகளில் வெற்றி பெற

நாயகி, நான்முகி, நாராயணி, கை நளின பஞ்ச
சாயகி, சாம்பவி, சங்கரி, சாமளை, சாதிநச்சு
வாயகி மாலினி, வாராகி, சூலினி, மாதங்கி என்று
ஆய, கியாதி யுடையாள் சரணம் அரண் நமக்கே. 50

### மோகம் நீங்க

அரணம் பொருள் என்று அருள் ஒன்று இலாத அசுரர்தங்கள்
முரண் அன்று அழிய முனிந்த பெம்மானும் முகுந்தனுமே
சரணம் சரணம் என நின்ற நாயகி, தன் அடியார்
மரணம் பிறவி இரண்டும் எய்தார் இந்த வையகத்தே. 51

### அபிராமியின் திருவடியை அடைய

வையம் துரகம் மதகரி மாமகுடம் சிவிகை
பெய்யும் கனகம் பெருவிலை ஆரம் பிறைமுடித்த
ஐயன் திருமனையாள் அடித்தாமரைக்கு அன்பு முன்பு
செய்யும் தவமுடையார்க்கு உளவாகிய சின்னங்களே. 52

### உயர்ந்த தவம் சிறக்க

சின்னம் சிறிய மருங்கினில் சாத்திய செய்யபட்டும்
பென்னம் பெரிய முலையும் முத்தாரமும், பிச்சிமொய்த்த
கன்னங் கரிய குழலும், கண்மூன்றும் கருத்தில் வைத்துத்
தன்னந்த தனி இருப்பார்க்கு இதுபோலும் தவம் இல்லையே! 53

### வறுமை நீங்க

இல்லாமை சொல்லி ஒருவர்தம் பாற்சென்று, இழிவுபட்டு
நில்லாமை நெஞ்சில் நினைகுவிரேல், நித்தம் நீடுதவம்
கல்லாமை கற்ற கயவர்தம் பால், ஒரு காலத்திலும்
செல்லாமை வைத்த திரிபுரை பாதங்கள் சேர்மின்களே! 54

### மனக்கவலை நீங்கி மகிழ்ச்சி பெற

மின் ஆயிரம் ஒரு மெய்வடிவாகி விளங்குகின்றது
அன்னாள், அகமகிழ் ஆனந்தவல்லி, அருமறைக்கு
முன்னாய் நடுஎங்குமாய், முடிவாய் முதல்விதன்னை
உன்னாது ஒழியினும், உன்னினும் வேண்டுவது ஒன்றிலையே! 55

### வசீகரிக்கும் ஆற்றல் பெற

ஒன்றாய் அரும்பிப் பலவாய் விரிந்து இவ்வுலகு எங்குமாய்
நின்றாள், அனைத்தையும் நீங்கி நிற்பாள், என்றன் நெஞ்சினுள்ளே
பொன்றாது நின்று புரிகின்றவா! இப்பொருள் அறிவார்
அன்று ஆலிலையில் துயின்ற பெம்மானும் என் ஐயனுமே. 56

### அறங்கள் பல செய்ய

ஐயன் அளந்தபடி இருநாழி கொண்டு, அண்டமெல்லாம்
உய்ய அறஞ் செயும் உன்னையும் போற்றி, ஒருவர் தம்பால்
செய்ய பசும்தமிழ் பாமாலையும் கொண்டு சென்று, பொய்யும்
மெய்யும் இயம்ப வைத்தாய்! இதுவோ உன்றன் மெய்யருளே? 57

### நலம் கிடைக்க

அருணாம் புயத்தும், என் சித்தாம் புயத்தும் அமர்ந்திருக்கும்
தருணாம் புயமுலைத் தையல் நல்லாள், தகைசேர் நயனக்
கருணாம் புயமும் வதனாம் புயமும் கராம் புயமும்
சரணாம் புயமும் அல்லால் கண்டிலேன் ஒரு தஞ்சமுமே. 58

### நல்ல குழந்தைகளைப் பெற

தஞ்சம் பிறிதுஇல்லை ஈது அல்லது என்று உன் தவ நெறிக்கே
நெஞ்சம் பயில நினைக்கின்றிலேன்; ஒற்றை நீள் சிலையும்
அஞ்சு அம்பும் இக்கு அலராக நின்றாய்; அறியார் எனினும்
பஞ்சு அஞ்சு மெல்லடியார் அடியார் பெற்ற பாலரையே. 59



### மெய்யுணர்வு தோன்ற

பாலினும் சொல் இனியாய்! பனிமாமலர்ப் பாதம் வைக்க,
மாலினும் தேவர் வணங்க நின்றோன், கொன்றை வார்சடையின்
மேலினும் கீழ்நின்று வேதங்கள் பாடும் மெய்ப்பீடம் ஒரு
நாலினும் சாலநன்றோ? அடியேன் முடை நாய்த்தலையே. 60

### நம்மை நாமே அறிந்து கொள்ள

நாயேனையும் இங்கு ஒரு பொருளாக நயந்து வந்து,
நீயே நினைவின்றி ஆண்டு கொண்டாய்; நின்னை உள்ள வண்ணம்
பேயேன் அறியும் அறிவு தந்தாய்; என்ன பேறு பெற்றேன்!
தாயே! மலைமகளே! செங்கண்மால் திருத் தங்கச்சியே! 61

### அச்சம் நீங்க

தங்கச் சிலைகொண்டு, தானவர் முப்புரம் சாய்த்து, மத
வெங்கண் கரிஉரி போர்த்த செஞ்சேவகன், மெய்யடையக்
கொங்கைக் குரும்பைக் குறியிட்ட நாயகி, கோகனகச்
செங்கைக் கரும்பும் மலரும் எப்போதும் என் சிந்தையதே. 62

### நல்லறிவு கிடைக்க

தேறும்படி சில ஏதுவும் காட்டி முன்செல்கதிக்குக்
கூறும் பொருள் குன்றில் கொட்டும் தறி; குறிக்கும் சமயம்
ஆறும் தலைவி இவளாய் இருப்பது அறிந்திருந்தும்
வேறும் சமயம் உண்டென்று கொண்டாடிய வீணருக்கே. 63

### மனம் ஒருநிலைப்பட

வீணே பலிகவர் தெய்வங்கள் பாற்சென்று, மிக்க அன்பு
பூணேன்; உனக்கு அன்பு பூண்டு கொண்டேன்; நின்புகழ்ச்சி அன்றிப்
பேணேன், ஒருபொழுதும்; திருமேனிப் பிரகாசம் அன்றிக்
காணேன்; இருநிலமும் திசை நான்கும் ககனமுமே. 64

### மக்கட் செல்வம் கிடைக்க

ககனமும் வானும் புவனமும் காண விற்காமன் அங்கம்
தகனம்முன் செய்த தவப்பெரு மாற்குத் தடக்கையும் செம்,
முகனும் முந்நான்கு இரு மூன்று எனத் தோன்றிய மூதறிவின்
மகனும் உண்டாயதன்றோ? வல்லி நீ செய்த வல்லபமே. 65

### தமிழில் புலமைபெற

வல்லபம் ஒன்றறியேன், சிறியேன்; நின் மலரடிச் செம்
பல்லவம் அல்லது பற்று ஒன்றிலேன், பசும் பொற்பொருப்பு
வில்லவர் தம்முடன் வீற்றிருப்பாய்! வினையேன் தொடுத்த
சொல்அவமாயினும், நின் திருநாமங்கள் தோத்திரமே. 66

### நல்ல வழியில் செல்ல

தோத்திரம் செய்து தொழுது, மின்போலும் நின் தோற்றம் ஒரு
மாத்திரைப் போதும் மனதில் வையாதவர் வண்மை, குலம்,
கோத்திரம், கல்வி குணம்குன்றி, நாளும் குடில்கள் தொறும்
பாத்திரம் கொண்டு, பலிக்கு உழலா நிற்பர் பார் எங்குமே. 67

### அனைத்துச் செல்வங்களும் பெற

பாரும், புனலும், கனலும் வெங்காலும், படர்விசும்பும்,
ஊரும் முருகு சுவை ஒளி ஊறுஒலி ஒன்றுபடச்
சேரும் தலைவலி, சிவகாம சுந்தரி சீறடிக்கே,
சாரும் தவம் உடையார் படையாத தனம் இல்லையே. 68

### சகல செல்வமும் பெருவாழ்வும் கிடைக்க

தனம்தரும், கல்விதரும், ஒருநாளும் தளர்வு அறியா
மனம்தரும், தெய்வ வடிவும் தரும், நெஞ்சில் வஞ்சமில்லா
இனம்தரும், நல்லன எல்லாம்தரும், அன்பர் என்பவர்க்கே
கனம்தரும் பூங்குழலாள் அபிராமி கடைக் கண்களே. 69

### இசை முதலிய கலைகளில் சிறக்க

கண்களிக்கும் படிக்கண்டு கொண்டேன்; கடம் பாடவியில்
பண்களிக்கும் குரல் வீணையும் கையும், பயோதரமும்
மண்களிக்கும் பச்சை வண்ணமுமாகி, மதங்கர்குலப்
பெண்களில் தோன்றிய எம் பெருமாட்டி தன் பேரழகே. 70

### உறுதியான மனத்திற்கு

அழகுக்கு ஒருவரும் ஒவ்வாத வல்லி, அருமறைகள்
பழகிச் சிவந்த பதாம் புயத்தாள், பனி மாமதியின்
குழவித் திருமுடிக் கோமள யாமளைக் கொம்பு இருக்க
இழவுற்று நின்ற நெஞ்சே! இரங்கேல், உனக்கு என்குறையே? 71

### பிறவிப் பிணி தீர

என்குறை தீரநின்று ஏத்துகின்றேன்; இனியான் பிறக்கின்,
நின்குறையே அன்றியார் குறைகாண்! இருநீள் விசும்பின்
மின்குறை காட்டி மெலிகின்ற நேர்இடை மெல்லியலாய்!
தன்குறை தீர எங்கோன் சடைமேல் வைத்த தாமரையே! 72

### நிதி உதவி கிடைக்க

தாமம் கடம்பு; படைபஞ்ச பாணம்; தனுக்கரும்பு;
யாமம் வயிரவர் ஏத்தும் பொழுது எமக்கு என்று வைத்த
சேமம் திருவடி; செங்கைகள் நான்கு ஒளி செம்மை; அம்மை
நாமம் திரிபுரை; ஒன்றோடு இரண்டு நயனங்களே. 73



### செய்யும் தொழிலில் முதன்மை பெற

நயனங்கள் மூன்றுடை நாதனும் வேதமும் நாரணனும்
அயனும் பரவும் அபிராமவல்லி, அடியிணையைப்
பயன் என்று கொண்டவர், பாவையர் ஆடவும் பாடவும் பொன்
சயனம் பொருந்து தமனியக் காவினில் தங்குவரே. 74

### விதியை வெல்ல

தங்குவர் கற்பகத் தாருவின் நீழலில்; தாயர் இன்றி
மங்குவர் மண்ணில் வழுவாப் பிறவியை; மால்வரையும்
பொங்குஉவர் ஆழியும் ஈரேழ் புவனமும் பூத்த உந்திக்
கொங்கு இவர் பூங்குழலாள் திருமேனி குறித்தவரே. 75

### கணவன் மனைவி ஒற்றுமைக்கு

குறித்தேன் மனத்தில் நின் கோலம் எல்லாம்; நின் குறிப்பு அறிந்து
மறித்தேன் மறலி வருகின்ற நேர்வழி; வண்டு கிண்டி
வெறித்தேன் அவிழ்கொன்றை வேணிப்பிரான் ஒரு கூற்றை மெய்யில்
பறித்தே குடிபுகுதும் பஞ்சபாண பயிரவியே! 76

### பகை நீங்க

பயிரவி, பஞ்சமி, பாசாங்குசை, பஞ்சபாணி, வஞ்சகர்
உயிர்அவி, உண்ணும் உயர் சண்டி, காளி, ஒளிரும் கலா
வயிரவி, மண்டலி, மாலினி, சூலி, வராகி என்றே
செயிர்அவி நான்மறை சேர்திரு நாமங்கள் செப்புவரே. 77

### ஆண்களின் நீண்ட ஆயுளுக்கு

செப்பும் கனக கலசமும் போலும் திருமுலைமேல்
அப்பும் களப அபிராமவல்லி, அணிதரளக்
கொப்பும் வயிரக் குழையும் விழியின் கொழுங்கடையும்
துப்பும் நிலவும் எழுதிவைத்தேன் என் துணை விழிக்கே. 78

### சிற்றினம் சேராதிருக்க

விழிக்கே அருள்உண்டு அபிராமவல்லிக்கு; வேதம் சொன்ன
வழிக்கே வழிபட நெஞ்சுண்டு எமக்கு; அவ்வழிகிடக்கப்
பழிக்கே உழன்று, வெம்பாவங்களே செய்து, பாழ் நரகக்
குழிக்கே அழுந்தும் கயவர்தம்மோடு என்னகூட்டு இனியே. 79

### எல்லையில்லா ஆனந்தம் அடைய

கூட்டிய வா என்னைத் தன் அடியாரில்; கொடிய வினை
ஓட்டிய வா; என் கண் ஓடிய வா; தன்னை உள்ளம் வண்ணம்
காட்டிய வா; கண்ட கண்ணும் மனமும் களிக்கின்றவா;
ஆட்டிய வா நடம்; ஆடகத் தாமரை ஆர் அணங்கே! 80

**நல்ல நடத்தை உண்டாக**

அணங்கே! அணங்குகள் நின்பரிவாரங்கள் ஆகையினால்
வணங்கேன் ஒருவரை; வாழ்த்துகிலேன்; நெஞ்சில் வஞ்சகரோடு
இணங்கேன்! எனது உனதென்றிருப்பார் சிலர் யாவரொடும்
பிணங்கேன்! அறிவொன்றிலேன்; என்கண் நீவைத்த பேரளியே. 81

**ஞாபகசக்தி அதிகரிக்க**

அளியார் கமலத்தில் ஆரணங்கே! அகிலாண்டமும் நின்
ஒளியாக நின்ற ஒளிர்திருமேனியை உள்ளுதொறும்
களியாகி, அந்தக் கரணங்கள் விம்மிக் கரை புரண்டு,
வெளியாய் விடின் எங்ஙனே மறப்பேன்; நின் விரகினையே. 82

**அனைத்தும் கிடைக்க**

விரவும் புதுமலர் இட்டு, நின்பாத விரைக் கமலம்
இரவும் பகலும் இறைஞ்ச வல்லார் இமையோர் எவரும்
பரவும் பதமும், அயிராவதமும், பகீரதியும்
உரவும் குலிசமும், கற்பகக் காவும் உடையவரே. 83

**சிறந்த குரு கிடைக்க**

உடையாளை ஒல்கு செம்பட்டுடையாளை, ஒளிர்மதிச்செஞ்
சடையாளை, வஞ்சகர் நெஞ்சு அடையாளைத் தயங்கும் நுண்ணூல்
இடையாளை, எங்கள் பெம்மான் இடையாளை, இங்கு என்னை இனிப்
படையாளை உங்களையும் படையா வண்ணம் பார்த்திருமே. 84

**நல்வழி கிடைக்க**

பார்க்கும் திசைதொறும் பாசாங்குசமும் பனிச் சிறை வண்டு
ஆர்க்கும் புதுமலர் ஐந்தும், கரும்பும் என் அல்லல் எல்லாம்
தீர்க்கும் திரிபுரையாள் திருமேனியும் சிற்றிடையும்
வார்க்குங்கும முலையும் முலைமேல் முத்து மாலையுமே. 85

**பயப்படாமல் இருக்க**

மால் அயன் தேட, மறைதேட, வானவர்தேட, நின்ற
காலையும், சூடகக் கையையும் கொண்டு கதித்த கப்பு
வேலை வெங்காலன் என்மேல் விடும்போது வெளிநில் கண்டாய்
பாலையும் தேனையும் பாகையும் போலும் பனிமொழியே! 86

**செய்ய முடியாதவற்றைச் செய்து புகழ்பெற**

மொழிக்கும் நினைவுக்கும் எட்டாத நின் திருமூர்த்தி என்றன்
விழிக்கும் வினைக்கும் வெளிநின்றதால்; விழியால் மதனை
அழிக்கும் தலைவர் அழியா விரதத்தை அண்டமெல்லாம்
பழிக்கும்படி ஒரு பாகம் கொண்டு ஆளும் பராபரையே! 87



**அபிராமியைச் சரணடைய**

பரம் என்று உனை அடைந்தேன் தமியேனும் உன் பத்தருக்குள்
தரம் அன்று இவன் என்று தள்ளத் தகாது; தரியலர்தம்
புரம் அன்று எரியப் பொருப்புவில் வாங்கிய, போதில் அயன்
சிரம் ஒன்று செற்ற கையான் இடப்பாகம் சிறந்தவளே! 88

**அன்னையை மறக்காமல் இருக்க**

சிறக்கும் கமலத் திருவே! நின் சேவடி சென்னிவைக்கத்
துறக்கம் தரும்நின் துணைவரும் நீயும் துரியம் அற்ற
உறக்கம் தரவந்து உடம்போடு உயிர்உறவு அற்று அறிவு
மறக்கும் பொழுது என்முன்னே வரல்வேண்டும் வருந்தியுமே. 89

**குறைகள் நீங்கிப் பிரிந்தவர் கூட**

வருந்தா வகை என்மனத் தாமரையினில் வந்து புகுந்து
இருந்தாள் பழைய இருப்பிடமாக; இனி எனக்குப்
பொருந்தாதொரு பொருள் இல்லை; விண் மேவும் புலவருக்கு
விருந்தாக வேலை மருந்தானதை நல்கம் மெல்லியலே! 90

**உயர்ந்த பதவி கிடைக்க**

மெல்லிய நுண்ணிடை மின்னனையாளை, விரிசடையோன்
புல்லிய மென்முலை பொன்னனையாளைப் புகழ்ந்து மறை
சொல்லிய வண்ணம் தொழும் அடியாரைத் தொழுமவர்க்குப்
பல்லியம் ஆர்த்தெழ வெண்பகடு ஊரும் பதம் தருமே. 91

**கொள்கைப் பிடிப்புக்கு**

பதத்தே உருகி நின்பாதத்திலே மனம்பற்றி உன்றன்
இதத்தே ஒழுக அடிமை கொண்டாய்! இனியான் ஒருவர்
மதத்தே மதிமயங்கேன்; அவர் போன வழியுஞ் செல்லேன்
முதற்றேவர் மூவரும் யாவரும் போற்றும் முகிழ்நகையே! 92

**உண்மை நிலையை அறிய**

நகையே இஃது, இந்த ஞாலமெல்லாம் பெற்ற நாயகிக்கு
முகையே முகிழ்முலை, மானே முதுகண், முடிவில் அந்த
வகையே பிறவியும்; வம்பே மலைமகள் என்பது; நாம்
மிகையே இவள்தன் தகைமையை நாடி விரும்புவதே. 93

**மனநோய் அகல**

விரும்பித் தொழும் அடியார் விழிநீர் மல்கி, மெய்புளகம்
அரும்பித் ததும்பிய ஆனந்தம் ஆகி, அறிவு இழந்து,
சுரும்பிற் களித்து, மொழி தடுமாறி, முன் சொன்னவெல்லாம்
தரும்பித்தர் ஆவர் என்றால் அபிராமி சமயம் நன்றே. 94

**நன்மையும் தீமையும் ஒன்றெனக் கருத**

நன்றே வருகினும், தீதே விளைகினும் நான் அறிவது
ஒன்றேயும் இல்லை; உனக்கே பரம்; எனக்கு உள்ளவெல்லாம்
அன்றே உனதென்று அளித்து விட்டேன்; அழியாத குணக்
குன்றே! அருட்கடலே! இமவான் பெற்ற கோமளமே! 95

**சகல கலைகளிலும் சிறக்க**

கோமளவல்லியை, அல்லியந்த தாமரைக் கோயில் வைகும்
யாமள வல்லியை, ஏதம் இலாளை எழுதரிய
சாமள மேனிச் சகலகலா மயில் தன்னைத் தம்மால்
ஆம் அளவும் தொழுவார் எழு பாருக்கும் ஆதிபரே. 96

**தனது துறையில் சிறந்து விளங்க**

ஆதித்தன், அம்புலி, அங்கி, குபேரன், அமரர் தம்கோன்
போதிற் பிரமன், புராரி, முராரி, பொதிய முனி
காதிப் பொருபடைக் கந்தன், கணபதி, காமன் முதல்
சாதித்த புண்ணியர் எண்ணிலர் போற்றுவர் தையலையே. 97

**வஞ்சகரது செயலில் இருந்து விடுபட**

தைவந்து நின்னடித் தாமரை சூடிய சங்கரற்குக்
கைவந்த தீயும், தலைவந்த ஆறும் கரந்ததெங்கே?
மெய்வந்த நெஞ்சின் அல்லால் ஒருகாலம் விரகர் தங்கள்
பொய்வந்த நெஞ்சிற் புக அறியா மடப் பூங்குயிலே! 98

**திருமணம் செய்ய**

குயிலாய் இருக்கும் கடம்பாடவியிடை; கோல வியன்
மயிலாய் இருக்கம் இமயாசலத்திடை; வந்துதித்த
வெயிலாய் இருக்கும் விசும்பில்; கமலத்தின் மீது அன்னமாம்
கயிலரயருக்கு அன்று இமவான் அளித்த கனங்குழையே! 99

**அன்பால் பிணைக்க**

குழையத் தழுவிய கொன்றையந்தார் கமழ் கொங்கைவல்லி,
கழையைப் பொருத திருநெடுந் தோளும், கருப்பு வில்லும்
விழையப் பொருதிறல் வேரியம் பாணமும், வெண் ணகையும்
உழையைப் பொரு கண்ணும், நெஞ்சில் எப்போதும் உதிக்கின்றவே. 100

**நூற்பயன்**

ஆத்தாளை, எங்கள் அபிராம வல்லியை, அண்டமெல்லாம்
பூத்தாளை, மாதுளம் பூ நிறத்தாளைப் புவியடங்கக்
காத்தாளை, அங்குசம், பாசம் குசமும் கரும்பும் அங்கை
சேர்த்தாளை முக்கண்ணியைத் தொழுவார்க்கு ஒரு தீங்கில்லையே!